5th February 1959]

SRI A. VEDARATHNAM : இப்போது, இதுவரை திறக்கப் பட்டிருக்கும் அத்தனை கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக் கிறார்களா ? அப்படி இல்லையானால், டாக்டர்கள் இல்லாத ஆஸ்பத்திரி களுக்கெல்லாம் டாக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அனேகமாக எல்லா கால்நடை ஆஸ்பத்திரிகளிலும் டாக்டர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒன்றி ரண்டு இடங்களில் போதுமான டாக்டர்கள் கிடைக்காமல் இருக்கலாம். டாக்டர்கள் பற்றாக்குறை இருக்கிறது. இதை சமாளிப்பதற்கு "ஸ்டாக் மென்" இருக்கவேண்டும்.

SRI M. K. SOMASUNDARAM : கால்நடை ஆஸ்பத்திரிகளில் டாக்டர்கள் இல்லை என்ற பிரச்னை பெருவாரியாக இன்னும் இருந்து வருகிறது. எனவே, உத்தியோகத்தை விட்டுவிட்டு வெளியேறும் டாக்டர்களை கட்டாயமாக இந்த ஆஸ்பத்திரிகளில் நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கால்நடை டாக் டர்களின் நிலைமை மனிதர்களுக்கு வைத்தியம் பார்க்கும் டாக்டர்களின் நிலைமையைப் போன்றது அல்ல. கால்நடை டாக்டர்களுக்கான பரீக்ஷை பாஸ் பண்ணினவர்கள் இந்த ஸ்தாபனங்களில் வேலைக்கு வந்துதான் ஆகவேண்டும். அவர்களுக்கு தனியாக உத்தியோகம் கிடைப்பதில்லை. வேண்டுமானால், அவர்கள் வேறு ராஜ்யங்களுக்குப் போகலாம். கிடைக்கும் கால்நடை டாக்டர்களைக் கொண்டு இந்த ஆஸ்பத்திரிகள் நடத்தப்பட்டு வருகின்றன.

*23 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

S.P.C.A. உள்ள இடங்களிலெல்லாம் கால்நடை ஆஸ்பத்திரிகள் வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Regular veterinary institutions (either veterinary hospital or veterinary dispensary) are functioning already at all places where S.P.C.A. are functioning, except Ayyampet. The veterinary dispensary at Papanasam which is only at a distance of five miles serves the needs of Ayyampet.

SRI M. KALYANASUNDARAM : : மாடுகள் வைத்துக் கொண் டிருக்கும் விவசாயிகளுக்கு S. P. C. A. ஸ்தாபனத்தால் நன்மையை விடத்தீமைதான் அதிகமாக ஏற்படுகிறது என்பதை சர்க்கார் அறிவார் களா ? அந்தக் காரணத்தால் இந்த ஸ்தாபனத்தை சர்க்கார் மூடு வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தி னரைப் போன்ற ஒரு சிலர் இம்மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருக் கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். அது சரி அல்ல.

## *Hindi*

*24 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம்மாநில ஆரம்பப் பள்ளிகளில் ஹிந்தி எந்த வகுப்பிலிருந்து போதிக்கப்படும் ?